# காந்தியப் பொருளாதாரம்

T. D. திருமலை
தத்துவ பிரசாரகர், தமிழ்நாடு காந்தி நினைவு நிதி



தமிழ்நாடு காந்தி நினைவு நிதி
மதுரை

மகாத்மா காந்தியின் கருத்துக்கள்
விநோபா அடிகளின் அறிவுரைகள்
சர்வோதய லட்சிய விளக்கங்கள்
கிராமதான இயக்கச் செய்திகள்

முதலியவைகள் வெளிவரும் பத்திரிகைகள்

## "கிராம ராஜ்யம்"

(வார வெளியீடு)

65–66 ராட்டன் பஜார், சென்னை-3

தனிப்பிரதி 6 ந. பை ஆண்டுச் சந்தா ரூ. 3



## "சர்வோதயம்"

(மாத வெளியீடு)

24 சீனிவாசபுரம், தஞ்சை

ஆங்கிலம்: 37 ந.பை ஆண்டுக்கு: 4—50
தமிழ்: 25 ந.பை ஆண்டுக்கு: 3—00



## "BHOODAN"

(WEEKLY)

**Akhil Bharat Sarvaseva Sangh**

GOLGHAR, VARANASI

Annual Subscription Rs 6.

# காந்தியப் பொருளாதாரம்



T. D. திருமலை
தத்துவ பிரசாரகர், தமிழ்நாடு காந்தி நினைவு நிதி




தமிழ்நாடு காந்தி நினைவு நிதி
மதுரை

# காந்தியப் பொருளாதாரம்

## இன்றைய நிலை

உலகத்தில் வாழும் ஜீவராசிகள் அனைத்தும் உயிர் வாழ உழைப்பதில்லை. ஏனெனில் அவர்களுக்கு இறைவன் உணவு தயாராக வைத்திருக்கிறான். அவை அதைத் தேடி அடைகின்றன. மிகப் பெரிய வயிறு படைத்த யானைகள்கூட காட்டிலே நன்கு உண்டு களிப்புடன் வாழ்கின்றன. அவைகளில் ஒன்றைக் கூட நாம் வைத்து பராமரிக்க மிகச் சிரமப்படுகிறோம்.

ஆய்ந்து பார்க்கும் பொழுது, மனிதன் மட்டும்தான் தனக்கு வேண்டிய தேவைகள் அனைத்தையும் உழைத்துப் பாடுபட்டு அடைய வேண்டியிருக்கிறது. எனவே அவன் உழைக்கிறான். எவ்வளவுதான் கஷ்டப்பட்டு உழைத்தாலும் மனித வர்க்கத்தில் பெரும்பான்மையோருக்கு அடிப்படைத் தேவையான உணவு, உடை கூட சரியானபடி கிட்டுவதில்லை. இந்நிலை நீண்டகாலமாக இருந்து வருகிறது. மணிக்கணக்காக அன்றாடம் நெற்றி வியர்வை நிலத்தில்விழ உழைப்பவன் அதன்பயனை முற்றிலும் அனுபவிக்க இயலவில்லை. ஏதோ சிலர் குறைந்த பட்ச உழைப்பில் சிரமமில்லாமல் செல்வம் தேடிக் குவித்துக் கொள்ள முடிகிறது. எனவே உழைப்பில் நம்பிக்கையும் வர, வர குறைந்து வருகிறது.

சமுதாய, அரசியல், பொருளாரத் துறைகளில் காலத்திற்கு காலம் மாறுதல்கள் ஏற்படவே செய்கின்றன. ஆனால் பிரச்னை இன்னும் தீர்ந்தபாடில்லை. முடியாட்சி நீங்கி குடியாட்சி ஏற்பட்டு, ஜனநாயகம் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஜனநாயக முறையால் மக்கள்வசம் அதிகாரம் வந்துவிட்டது என்ற நிலை ஏற்பட்டும் பொருளாதார நிலை சீரடையாமல் இருப்பதைக் காண்கிறோம். விஞ்ஞான வளர்ச்சியால் பொருள் உற்பத்தி சாதனங்கள் திறமைமிக்கவைகளாகச்

செய்யப்பட்டன. தொழில் துறையிலே ஒரு பெரும் புரட்சியே நிகழ்ந்தது. இதன் பலனாக முந்திய நிலைமையே உறுதியாயிற்று. உழைப்பவனின் ஏழைமை முன்னிலும் கொடூரமானதோடல்லாமல் செல்வந்தர்களின் செல்வம் அதிகரித்து வர ஏதுவாயிற்று. எனவே பொருளாதாரத்துறையில் மாற்றம் காணவேண்டிய அவசியத்தைப் பற்றி பொதுநலக் கண்ணோட்டம் உள்ளவர்கள் சிந்தித்தேயாக வேண்டும்.

## நவீனப் பொருளாதார முறை

நவீனப் பொருளாதாரத் திட்டங்களின் சாதனைகளையும், பொருளாதார சாஸ்திரம் ஆய்ந்து அறிவிக்கிற முடிவுகளின் திறமையையும் குறைத்துக் கூற முடியாது. ஆனால் அதன் குறிக்கோளும், திட்டங்களின் செயல் முறைகளும் மனித வர்க்கத்தின் நலனுக்கு ஏற்றதா, இல்லையா என்று பார்க்க வேண்டும். இங்கே காணப்படுகின்ற குறைகள் சமுதாயத்தை எத்தனையோ வகைகளில் பாதிக்கின்றன.

### பெருகும் தேவைகள்

நாட்டை வளப்படுத்தினால் வறுமை நீங்கும். இதற்கு பொருள் உற்பத்தி அதிகரிக்க வேண்டும். உற்பத்தி பெருக மக்கள் அதிக ஊக்கத்துடன் உழைப்பது அவசியம். இவர்களை எவ்வாறு ஊக்குவிப்பது? 'உங்கள் தேவைகளைப் பெருக்கிக் கொள்ளுங்கள். இதுவே வழி' என்று பொருளாதார நிபுணர்கள் ஆலோசனை கூறுகிறார்கள். தேவைகள் பெருகப் பெருக அவைகளை நிறைவு செய்துகொள்வதற்காக மனிதன் அதிகமாகப் பாடுபடுவான் என்று கருதுகிறார்கள். இவ்வழியில் செல்லும் இன்றைய உலகில் எல்லாப் பகுதிகளிலும் பற்றாக் குறை இருந்து வருகிறது. வேறு விதமாகச் சொன்னால் வாழ்க்கைத்தரம் உயருகிறது என்பார்கள். இது இட்டுச் செல்லும் இறுதிக் கட்டம் என்ன? எவ்வாறாகிலும் தான் நினைத்த பொருளை அடையவேண்டும் என்று மனிதன் முற்படுகிறான்.

உழைத்துப் பெறலாம், அல்லது சுலபமாக தீய வழியிலும் பெறலாம் என்ற நிலைக்கு மனிதன் வந்துவிட்டான். இதன் பலனாக சுயநலமும் பேராசையுமே மக்களை ஆட்டிவைக்கிறது. சமுதாய நலன் பற்றி அக்கறை குறைந்துவிட்டது.

மிதமிஞ்சிய உற்பத்தி

எல்லா நாடுகளிலும் பொருள் உற்பத்தி அதிகரித்துக் கொண்டே செல்லவேண்டும் என்ற முனைப்பு இருந்து வருகிறது. ஐந்து பேர்களுக்கு ஒரு மோட்டார் வண்டி கிடைக்கிறது என்ற நிலை வந்தும் அமெரிக்காவில் அதன் உற்பத்தி அளவு நிர்ணயமாகவில்லை. ஒவ்வொருவருக்கும் ஒரு மோட்டார் வண்டி கிடைக்கும்படி அதன் உற்பத்தியை அதிகரித்தால் என்ன என்ற முயற்சி நடைபெற்று வருகிறது. விஞ்ஞானம் அளித்த அறிவையெல்லாம் பயன்படுத்தி இயந்திர சாதனங்களை முன்னிலும் அதிகத் திறமை வாய்ந்ததாகச் செய்து எல்லாத் துறைகளிலும் பொருள் உற்பத்தியை பெருக்கிக் கொண்டே செல்கிறார்கள். இவ்வாறு வரம்பற்ற முறையில் பொருள் பெருக்கம் உள்ள நாடு, இதர நாடுகளில் தங்கள் சாமான்களுக்கு சந்தை தேடுகிறது. எனவே நாடு பிடிக்கும் ஆசை மேலிட, சர்வ தேசிய நல்லுறவுக்கு பங்கம் ஏற்படுகிறது. சதா யுத்தக் கெடுபிடியில் உலகம் சிக்கித் தவிக்கவேண்டியிருக்கிறது.

உள் நாட்டிலும் மக்களின் நிம்மதியான வாழ்க்கையை இது குலைக்கிறது. தற்காலத்தில் வாழ்க்கைத்தரம் உயர்ந்து கொண்டே போகிறது. இந்த உயர்ந்ததர வாழ்க்கை நடத்துவதற்கே பொழுதெல்லாம் ஒருவன் உழைத்தாகவேண்டும். மிகுதியான பொருள் உற்பத்தியால் வியாபாரி எவ்வாறாகிலும் அதனை விற்றாக வேண்டும். உற்பத்தியாகிற வேகத்தில் வாங்குவதற்கான வாய்ப்பும் வசதியும் அமெரிக்காவிலேயே மக்களுக்கு இல்லை. தொழிற்சாலைகள் நடத்தவேண்டும். அதில் தயாரான பண்டங்களும் விநியோகமாகிக் கொண்டேயிருக்க

வேண்டும். எனவே மாதத்தவணை முறையில் கடனுக்கு பண்டங்களை மக்களுக்கு விற்கிறார்கள். உற்பத்தியாகிற வேகத்தில் எல்லாப் பொருள்களையும் மக்கள் பயன் படுத்திவிடமுடியாது, உதாரணமாக ஒரு ரேடியோ, ஒரு மோட்டார்கார் இதெல்லாம் வருஷத்திற்கு ஒன்று என்று வாங்கவேண்டிய அவசியமில்லை. அவை வேகமாக அழியாது. எனவே அவைகளை வாங்கி வைப்பதற்குப் புதிது புதிதாக வழிமுறைகளைக் கையாள வேண்டியிருக்கிறது. விளம்பரம் மூலமும் வேறுபல மாற்றங்கள் அவைகளில் செய்தும் மக்கள் மனத்தை மாற்றி பழையதை விட்டு புதிது புதிதாக வெளிவரும் சாமான்களைப் பெறவைக்க வேண்டும். இதற்காகவே தவணை முறையில் அமெரிக்காவில் வியாபாரம் செய்கிறார்கள்.

மக்களும் ஓயாத கடன் தொல்லையால் சிக்குண்டு அதிக நேரம் உழைத்து சாப்பிடவேண்டியிருக்கிறது. உணவு உற்பத்தியில்கூட இதே முனைப்புக் காணப்படுகிறது. விளைச்சலை அதிகமாகக் காட்டவேண்டும் என்ற வெறியால் அமெரிக்காவில் ஏராளமான கோதுமை விளைகிறது. விலைவாசி குறைந்து விடுமே என்ற அச்சத்தால் அதை டன் கணக்கில் சமுத்திரத்தில் கொட்டுகிறார்கள். செயற்கை உரங்கள் இடுவதால் நிலத்தின் சத்து குறைந்து வருகிறது என்பதை இப்பொழுது அவர்களே காண்கிறார்கள்.

நாட்டுக்குத் தேவையான எல்லாப்பொருள்களின் அளவை நிர்ணயித்து அதன் உற்பத்தியை ஒரு வரம்புக்குட்படுத்த வேண்டும். எந்த இயந்திர சாதனங்களினால் கடினமான, சலிப்பான வேலையை குறைத்து ஓய்வு நேரத்தை அதிகரித்துக் கொள்ள வேண்டும் என்று மனிதன் கருதினானோ அது கிட்டவில்லை. எனவே ஒரு குறிப்பிட்ட சாதனங்களால் தேவையான அளவு ஒரு பொருளை அன்றாடம் 4 மணிநேர உழைப்பால் உற்பத்தி செய்யலாம் என்றிருந்தால் மீதி நாலுமணி நேரத்தை இதே பொருள் உற்பத்தியில் செலவிடாமல் மனிதனுக்கு ஓய்வு நேரமாக விடுங்கள் என்று பெர்ட்ராண்டு ரசல் கூறுகிறார்.

### பணம் ஒரு அளவுகோலா?

அக்காலத்தில் பண்டமாற்று முறை அமலிலிருந்தது. ஒருவன் தன்னிடமிருந்த ஒரு மூடை தானியத்தைக் கொடுத்து ஒருசேலை வாங்கப்புறப்பட்டால், நெசவாளி ஒரு ஆடு கேட்டான். ஆட்டைப் பெறச்சென்றால் அதன் சொந்தக்காரன் ஒரு கம்பளி கேட்பான். இவ்வாறாக ஒரு சேலை வாங்குவதற்குள் பல தொந்தரவுகள் நேரும். இடத்துக்கு இடம் எடுத்துச்செல்ல, பொருளைப் பத்திரமாகச் சேர்த்துவைக்க எல்லாம் சிரமம். எனவேதான் பண்டமாற்று முறையை எளிதாக்குவதற்கு நாணயச்செலாவணி அவசியமாயிற்று. பண்டமாற்று சாதனமாகப் பயன்பட வந்த நாணயம் இன்று அதிகச் செல்வாக்குபெற்றுவிட்டது. நாணயமே ஒரு முக்கியமான பொருளாக உருவாகிவிட்டது. மனிதனை ஆட்டிவைக்கிறது என்றே சொல்லவேண்டும். பணம் இல்லாதவன் இன்றைய சமுதாயத்தில் கௌரவமாக வாழ இயலாது என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. மேலும் ஏழையிடம் உள்ள ஒரு ரூபாய் இரண்டு அல்லது மூன்று நாட்களின் உணவைத் தேடித் தரும். ஆனால் பணக்காரரிடம் அதே ஒரு ரூபாய் ஒரு நிமிஷ நேரச் செலவுக்குப் போதாது. ஆகவே, ஒரு ரூபாய் ஒரு பொருளின் மதிப்பை கணிக்கும் அளவுகோலாகாது.

### பேரமும் போட்டியும்

ஒரு சாமானை விற்கும்போதோ வாங்கும்போதோ கடுமையான பேரம் நடக்கிறது. அதன் உண்மையான விலை என்ன என்று அறிவது இயலாது. ஏராளமாகச் சந்தைக்கு வந்த சாமான்கள் மிக மலிவாக கிடைக்கின்றன. குறைந்த அளவு உள்ளவை கிராக்கியாகவும் இருக்கின்றன. இதன் பலனாகத்தான் வியாபாரத்தில் 'பேரம்' என்ற வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. விநியோகம் முழுதும் வியாபார அடிப்படையிலேதான் நடைபெறுகிற அவசியம் இருக்கிறது. என்றாலும் இத்துறையில் கடுமையான போட்டாப்போட்டி காணப்படுகிறது. இதன் பலனாக மக்களுக்கு ஏற்படும் இன்னல் பல.

பற்றாக்குறையாக உள்ள பொருளுக்கு விலை ஏறுவதும் தேவைக்குமேல் உள்ளவைகளின் விலை மலிவாகவும் இருப்பது இயற்கையே. ஆனால் இதை உணர்ந்து வெளியிட்ட பொருளாதார நிபுணர்கள் இதனால் விளையும் கொடுமைகளை தவிர்க்க இயலவில்லை. ஏனென்றால் இவர்கள் கருத்து பொருளாதார துறையிலே மட்டும் ஊன்றி நின்றுவிட்டது. மேலும், உற்பத்திப் பெருக்கத்தை மட்டுமே சிந்தனை செய்து திட்டம் அமுலாகி வந்திருக்கிறது. ஆகையால் ஒரு இடத்தில் குவிந்தபொருள் நியாயமான அடிப்படையில் யாவர்க்கும் விநியோகம் ஆக இயலவில்லை. இதற்கான முறை எதுவும் பின்பற்றப்பட்டு வெற்றியடையவில்லை. முதலாளித்துவ பொருளாதார முறையில் இந்நிலைதான் இருக்கமுடியும் என்று கூறிவிடலாம். ஆனால் பொதுவுடைமை சமுதாயத்திலும் இக்குறை காணப்படுகிறது. எனவே நவீனப் பொருளாதார சாஸ்திரம், உற்பத்தியாகிற பொருள் நியாயமான அடிப்படையில் இயல்பாகவே விநியோகமாகும்படி வழிமுறை காண இயலவில்லை.

### இயந்திர ஆட்சி

எவ்வாறாயினும் பொருள் உற்பத்தி பெருக வேண்டும் என்பதே நவீனப் பொருளாதாரத்தின் குறிக்கோள். உற்பத்தியை துரிதப்படுத்த இயந்திர சக்தியை பூரணமாக பயன்படுத்த வேண்டும் என்று கூறப்படுகிறது. இதனால் மக்களுக்கு விளையும் பாதகத்தைப் பற்றி சிறிதும் அக்கறை காட்டப்படவில்லை. மனிதப் பண்பாடு எவ்வளவு சீர்கேடு அடைகிறது என்பதைப் பற்றி யாரும் சிந்திப்பதில்லை. மனிதனுடைய உழைப்பை இயந்திரம் எடுத்துக்கொள்ளும்போது அவன் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கிற மாறுதல் பற்றி மார்க்ரெட் மீட் என்ற அம்மையார் தலைமையில் ஐக்கியநாடுகள் சபையார் அமைத்த கமிட்டியின் அறிக்கை கூறுவதாவது:— "தொழிலிலோ, விவசாயத்திலோ புதுவிதமான கருவியைப் பயன்படுத்தி, கடின உழைப்பைக் குறைக்கவும் உற்பத்தியைப் பெருக்கவும் பொருளின் தரத்தை உயர்த்தவும் முயற்சி செய்யப்படுகிறது. இவ்

வாறு செய்யும்போது எதிர்பார்த்த பலன்களைத் தவிர வேறு சிலவும் விளைகின்றன. புதிதாக வருகிற கருவி எளிமையானதாக இருக்குமேயானால் வேலை செய்யும் மனித உறுப்புகளுக்கு அது உதவுகிறது. நெசவாளரிடம் உள்ள ஓடம் நீண்ட கையாகவும், தச்சர் கையிலுள்ள சுத்தியல் உறுதியான சக்திபெற்ற முஷ்டியாகவும் விளங்குகின்றன. இப்படிப்பட்ட கருவிகள் உடல் இயக்கத்தின் சலனத்திற்கு உதவுகின்றன. அதன் திறமையை வளர்க்கின்ற மனித உறுப்புக்களுடைய அடிப்படையான இயல்புக்கு விரோதமானதாக இவை அமைவதில்லை. அவைகளுக்குப் பதிலாகவும் விளங்குவதில்லை. ஆனால் இயந்திரம் உடலமைப்பை ஒட்டியதில்லை. அதற்குத்தனியான இயக்கம், அமைப்பு முதலியவை உண்டு. எனவே, மனிதன் அதற்கு அடிமையாகவேண்டும். கைத்தறியில் வேலை செய்யும் ஒரு பெண் கையுணர்வாலும், உடலசைவாலும் அதை இயக்குகிறாள். ஆனால் தொழிற்சாலையில் அவளுக்கு தொடர்பு இல்லாதபடி இயந்திரத் தறியை பார்த்தவண்ணம் நிற்கிறாள். இயந்திரம் வகுத்துக் கொடுத்த முறைப்படி செயல்படுகிறாள். வீட்டில் கைத்தறியில் வேலை செய்தபோது தன் சுய இயல்பையொட்டி அவள் நடந்துகொண்டாள். தனது இஷ்டப்படி வேலைதொடங்கவோ நிறுத்தவோ செய்தாள். ஆனால் தொழிற்சாலையில் தனது இயல்புகளை யெல்லாம் அங்கே வகுக்கப்பட்ட திட்டங்களுக்கு ஏற்ப மாற்றிக்கொள்ளும்படி ஆணையிடப்பட்டாள். சுருங்கச் சொன்னால் அவள் ஆட்டிவைக்கப்பட்டாள். இதனால் முந்திய நல்ல பழக்கவழக்கங்கள் பலவற்றை உதறித் தள்ளவேண்டியதாகிறது. ஆகையால் உற்பத்திமுறைகளையும், கருவிகளையும் இயந்திரமயமாக மாற்றுவதால் ஏற்படும் விளைவுகள் கவனிக்கப்படவேண்டும்.''

'எல்லோருக்கும் வேலை அளிக்கும் திட்டம்' என்று தற்பொழுது பறைசாற்றப்படுகிறது. நூறுபேர் செய்யக்கூடிய ஒரு வேலையை ஒரு இயந்திரம் செய்துவிடலாம். தொழில்முறையில் இயந்திரத்திற்கு முக்கியஸ்தானம் அளித்துக்கொண்டே வருவதும், மறுபுறம் எல்லோருக்கும் வேலை என்பதும் விந்தை

யாக இருக்கிறது. பெருகிக்கொண்டேவருகிற மனித சமுதாயத்தின் மனித சக்தி முழுவதையும் பயன்படுத்தவேண்டுமானல் இயந்திரத்திற்கு இரண்டாவது இடமே தரவேண்டும் என்பதும் அதன்பயன் நிர்ணயிக்கப்படவேண்டும் என்பதும் தெளிவு.

### சோறுமட்டும் போதுமா?

மனிதன் வெறும் வயிறு வளர்க்கும் பிராணி மட்டுமல்ல. அவனுக்குச் சோற்றேடு வேறு என்னவெல்லாமோ தேவைப்படுகின்றன. நவீனப் பொருளாதார சாஸ்திரம் மனிதனை ஒரு 'பொருளாதாரக் கருவி' யாகவே கருதுகிறது. அலெக்ஸிஸ் கேரெல் என்ற அறிஞர் 'மனிதனைப்பற்றி ஆராயப்படாதவை' என்ற நூலில் கூறுகிறர்:- ''மனிதன் சிந்திக்கிறன். உணர்கிறன், கஷ்டப்படுகிறன்; வேலை, உணவு, ஓய்வு, இவை தவிர வேறு சிலவும் அவனுக்குத் தேவை. உடலின் தேவைகளோடு ஆத்மிக அபிலாஷைகளும் அவனுக்கு உண்டு என்பதைப் பொருளாதார நிபுணர்கள் உணரவேண்டும். பொருளாதார நெருக்கடிக்குக் காரணம் தார்மிகத்தையும் அறிவையும் பொருந்தியதாக இருக்கலாம் என்பதையும் அவர்கள் உணரவேண்டும். பெரிய நகரங்களில் காணப்படும் அநாகரிகமான வாழ்க்கை, அலுவலகங்களிலும் ஆலைகளிலும் விளைகின்ற கொடுமைகள், பொருளாதார ஆசைகளுக்காக தார்மிகத்தின் மேன்மையையும் பணத்துக்காக அறிவையும் தியாகம் செய்வது,- இவற்றையெல்லாம் நவீன நாகரிகம் நமக்களித்திருக்கின்ற வரப்பிரசாதம் என ஒப்புக்கொள்ள முடியாது. மனித வளர்ச்சியைத் தடை செய்யும் இயந்திர உற்பத்தியை உதறித் தள்ள வேண்டும். பொருளாதாரமே எல்லாவற்றிற்கும் உரைகல் என்ற வாதம் இனி செல்லுபடி யாகாது. லோகாயதத்திலிருந்து நாம் விடுபட்டால்தான் வாழ்க்கையின் பல துறைகளிலும் மாற்றத்தைக் காணலாம் என்பதுதெள்ளத்தெளிவாகும்.''

### காந்திஜியின் கருத்து

தேவைகளைப் பெருக்கிக்கொண்டே போவது மனிதனை எல்லையிலாத் தொல்லைக்கு உட்படுத்துவதாகும். அவனுடைய

ஆசைகளுக்கோ அளவில்லை. எனவே இது அவனுடைய வளர்ச்சிக்கு இடையூருக அமைவதோடு சமுதாயத்திற்கும் அவனுல் நன்மை விளையாது. நாட்டின் உற்பத்தியின் வேகம் மனித ஆசையின் வேகத்தைவிடக் குறைவாகவேதானிருக்கும். உற்பத்தி அளவுக்கும் ஒரு எல்லைக்கோடு உண்டு. ஆகையால் செல்வ சேகரம் ஓரளவில் நின்றுவிடும். இந்நிலையில் மனிதன் இருப்பதைப் பகிர்ந்துகொள்வதே சாத்தியமாகும். எனவே தான் காந்தியடிகள் 'தேவையைப் பெருக்குவதற்குப் பதிலாகக் குறைத்துக்கொள்ள வேண்டும்' எளிய வாழ்க்கையை மேற்கொள்வதோடு மனித ஆசையை உன்னத இலட்சியத்தைப் பின்பற்றும் முயற்சியில் திருப்பிவிட வேண்டும் என்று கூறுகின்ருர்.

இன்றைய நிலையில் ஒரு மனிதனின் வருஷ வருமானம் சுமார் 278 ருபாய் என்று சர்க்காரின் சராசரிக் கணக்குக் கூறுகின்றது. ஒருவருடைய ஓராண்டுச் செலவு இந்த அளவுக்கு மேற்போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எளிய வாழ்க்கை என்பதற்கு இதுவே பொருளாகும். அதிகமாகச் சம்பாதிக்கும் திறமையுள்ள செல்வந்தர்கள் மேற்சொன்னபடி செலவைக் கட்டுப்படுத்தி மீதியைச் சமுதாய நலனுக்குச் செலவு செய்ய முன்வரவேண்டும். தர்மகர்த்தா முறை என்று இதைக் காந்தியடிகள் விளக்கினுர். இவ்வாறு மக்களனைவரும் பின்பற்றும்போது உற்பத்தியாகிற பொருள் நியாயமான முறையில் தானே விநியோகமாகும். பொருளாதார ஏற்றத்தாழ்வால் விளையும் கொடுமை நீங்கும். சுயநலம் படிப்படியாக மறைந்து சமுதாய நலனே குறிக்கோளாக அமையவும் வழி பிறக்கும். எல்லோரும் வாழவேண்டும் என்ற நோக்கம் நிறைவேறும்.

### சுயதேவைப் பூர்த்தி

விவசாயமே சமுதாயத்தின் அஸ்திவாரம். இதன் வளர்ச்சிக்கே முதல் ஸ்தானம் அளிக்கப்படவேண்டும். மற்ற பொருளுற்பத்தி யெல்லாம் விவசாய வேலைக்கு உதவியாகவே அமையவேண்டும். மக்களுக்கு விவசாயத்தில் நம்பிக்கை ஏற்பட

வேண்டுமானால் உடை முதலியபல பொருள்கள் கிராமத்திலேயே உற்பத்தியாக வேண்டும். விவசாயம் முழுநேர வேலையாக இல்லாமல் பரவலாக ஓராண்டு முழுதும் மேற்கொள்ள வேண்டிய அலுவலாகும். இடையிடையே துண்டு விழும் நேரங்களில் பிற தொழில்களை செய்யும் வாய்ப்பு விவசாயிக்கு இருக்கவேண்டும். இக்கருத்தை மனத்திலிருத்திக்கொண்டு பார்த்தால் ஒரே இடத்தில் பெரிய பெரிய இயந்திரங்களின் உதவி கொண்டு நடக்கும் தொழில்களால் மக்களுக்குப் பயனில்லை என்பதை உணரலாம். எனவே அவை குடிசைத் தொழில் ரூபத்தில் நடைபெற வேண்டும். தன் வீட்டிலேயே நடைபெறக்கூடிய இவ்வுற்பத்தி முறை, மனிதனின் சிருஷ்டித்திறனை வளர்ப்பதோடு தொழிற்சாலையில் நிகழும் எத்தனையோ கேடுகளையும் அநீதிகளையும் தவிர்க்கிறது. உணவு, உடை இவ்விரண்டிலுமாவது குறைந்தபட்சம் ஒரு கிராமம் அல்லது சில கிராமங்களின் கூட்டாக அமைந்த சிறு வட்டாரம் சுயநிறைவு பெற்றுவிட வேண்டும். அவைகளின் தேவை முழுதும் உற்பத்தியாகி அங்கேயே விநியோகமாகும் அமைப்பு இருக்கவேண்டும். இதனால் பண்டமாற்று சுலபமாகிறது. பணத்தின் செல்வாக்கு மட்டுப்படும். பணம் பண்டமாற்று சாதனமாக மட்டும் இலங்கும். சுரண்டலுக்கோ, தரகருக்கோ இடமிராது. இதற்குச் செய்யவேண்டிய குறைந்த அளவு கட்டுப்பாடு என்னவென்றால் உணவு, உடை, வீடு இத்துறைகளில் வியாபார முறைக்கு இடமில்லாமல் செய்வதேயாகும். இதர ஆடம்பரப் பொருள்களை வியாபாரத் துறைக்கு விட்டுவிடலாம். படிப்படியாக வியாபார முறை குறைந்தே வரவேண்டும்.

*விணுக்கலாமா?*

பொருளாதாரம் என்றால் சிக்கனம் என்று பொருளாகும். சிக்கனம் கஞ்சத்தனம் அல்ல. ஆரோக்கியமாகவும் உறுதியாகவும் வாழ்வதற்கு மனிதனுக்கு வாய்ப்பளிப்பதேயாகும். ஆடம்பரத்திற்கு இடமிருக்காது. சுற்றம், சூழ்நிலையில் கிடைக்கக்கூடிய பொருள் அத்தனையும் பயன்படுத்தி மேலே

சொன்ன வாழ்க்கை வசதி அமைத்துக் கொள்வது இதன் பொருள். உதாரணமாக உணவுக்குப் பயன்படுகிற தேங்கா யெண்ணெய், கடலெண்ணெய் இவைகளால் சோப்புச் செய் வதை நிறுத்தி இதர உணவுப் பொருள் அல்லாத தாவர வித்துக்களிலிருந்து கிடைக்கும் எண்ணெயைப் பயன்படுத்திச் சோப்புச் செய்யலாம்.

பூமியின் மேற்பரப்பில் விளைகிற அல்லது கிடைக்கிற பொருள்களையோ உபயோகப்படுத்தல் முறையாகும். ஏனென் ருல் இங்கே விளைகிற பொருள்கள் எவ்வளவு வேகமாகப் பயன் படுகிறதோ அதே வேகத்தில் மீண்டும் உண்டாக்கிக்கொள்ள லாம். மரங்களைப் பயன்படுத்தி வந்தால் மீண்டும் அவற்றைத் திட்டமிட்டு வளர்த்துக்கொள்ளலாம். ஆனல் இரும்போ, பூமிக்கு அடியிலிருந்து தோண்டியெடுக்கிற மற்றப் பொருள் களையோ பயன்படுத்தினுல் அவை எளிதில் செலவாகிவிடும். அவை வேகமாக உற்பத்தியாவதில்லை. இன்று வாழும் மக்களே அவை அனைத்தையும் பயன்படுத்திவிட்டால் வருங்கால உலகம் இன்னலுறும். இன்னும் நூருண்டுகளுக்குள் அமெரிக்காவில் உள்ள பெட்ரோல் கிணறுகள் வற்றி விடும் என்றும், பிறகு பெட்ரோல் கிடைக்காமல் தவிக்கும் நிலை அமெரிக்காவுக்கு ஏற்படும் என்றும் அஞ்சுகிறுர்கள்.

*காந்தி இயந்திரத்தின் எதிரியா?*

காந்தியடிகள் இயந்திரங்களுக்கும் விஞ்ஞானத்துக்கும் எதிரி என்று கருதுகிறவர்கள் பலர். இயந்திரங்களைப் போன்ற இன்னும்பல விஞ்ஞானத்தின் விளைவுகளுண்டு. இவைகளை விஞ்ஞானம் என்று கருதுதல் சரியில்லை. விஞ்ஞானம், எல்லோ ருக்கும் பயன்படும். காந்திஜி ஒரு சிறந்த சமுதாய விஞ்ஞானி யும், வாழ்க்கை விஞ்ஞானியும் ஆவர். இயந்திரங்களைப் பயன் படுத்துவதை முற்றிலும் அவர் தடுக்கவில்லை. ராட்டையே ஒரு சிறிய இயந்திரம்தான். தையல் இயந்திரம் போன்றவை சிறந்தவையே. மனிதன் ஒரு செயலை மீண்டும் மீண்டும் செய்து அலுத்து சலித்துவிடுகிறுன். இவை அவனுடைய பழக்க

வழக்கங்களைக் கூட பாதிக்கிறது. இவ்வாறு ஏற்படுகிற சலிப்பையும், மனித சக்திக்கு மீறிய கடினமான வேலையிலிருந்து அவனை விடுவிக்கவும் இயந்திரம் பயன்படவேண்டும். உதாரணமாக மேடு, காடுகளை நிறப்புவதற்கு மட்டும் ட்ராக்டர், புல்டோசர் முதலானவை பயன்படலாம். இன்னொரு முக்கியமானது என்னவென்றால் இயந்திரம் மனிதனை வேலையிலிருந்து நீக்கி, அவனுக்கு வேலை இல்லாத் திண்டாட்டத்தை ஏற்படுத்தக்கூடாது. உதாரணமாக மக்கள் சக்தி மிதமிஞ்சி இருக்கிற நம் நாட்டில் மாபெரும் இயந்திரங்களுக்கு நிச்சயமாக இடமில்லை.

இயந்திரம் மனிதனையும் உயிரற்ற சலனக் கருவியாக மாற்றிவிடுகிறது. அவனுடைய சிருஷ்டி சக்திக்கு இடமில்லாமல் செய்துவிடுகிறது. ஆகையால்தான் எத்தனையோ சமுதாயச் சீர்கேடுகளுக்கு முறையற்ற இயந்திர வளர்ச்சியே காரணம் என்று காந்திஜி கருதினார்.

சாத்தியம் என்பதற்காகவும், இருக்கிற இயந்திரமயமான தொழிற்சாலைகள் தொடர்ந்து நடந்து வருவதற்காகவும் குறிப்பிட்ட பொருள்களையாவது உற்பத்தி செய்து குவித்துக் கொண்டே இருக்கவேண்டிய நிலைமை இன்று உள்ளது. இதனால் ஏற்படுகிற இன்னல்களைப் பற்றி ஏற்கெனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. சுயதேவைப் பூர்த்தியைக் குறிக்கோளாகக்கொண்டு பொருளுற்பத்தித் திட்டம் செயல்படவேண்டும்.

பரவலாக தொழில்கள் நடைபெறுவதே சிறந்தமுறை. உதாரணமாக சுரங்கத்திலிருந்து உலோகம் வெட்டியெடுப்பது, போக்குவரத்து சாதனங்கள், இன்னும் இவைபோன்ற சில தொழில்களை பெரியஅளவில், கனரக இயந்திரங்களைக்கொண்டு தான் நடத்த முடியும். கிராமத்திலே நடைபெறும் சிறு தொழில், குடிசைத்தொழில்களுக்கு முரண் இல்லாதவையே இவ்வாறு நடத்தப்படலாம் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

எல்லோருக்கும் பசி என்பது பொதுவானது. இதில் வித்தியாசம் பாராட்டப்படுவது அநீதியாகும். அறிவாளி, முட்டாள், அங்கஹீனன் எல்லோரும் சாப்பிட்டேயாகவேண்டும். அறிவு, திறமை முதலியவைகளில் ஏற்றத்தாழ்வு இருக்கவேசெய்யும். இருப்பது கெடுதலும் அல்ல. ஆனால் அறிவு, திறமை இவைகளுக்கேற்பதான் ஒருவன் சம்பாதித்து வயிறு வளர்க்க முடியும் என்பது நியாயமாகாது. ஒரு தாய் கெட்டிக்கார மகனுக்கு வயிருற உணவு அளித்து, அசட்டுமகனை பட்டினிபோட்டோ, அரை வயிற்றுக்குச் சோறிடுவதோ கிடையாது. ஒரு சமுதாயத்தின் பொருளாதாரக் கோட்பாடு தாய்மையை அடிப்படையாகக்கொண்டு அமையவேண்டும் என்பது காந்தியடிகளின் திட்டம்.

## கிராமதான வழி

ஒரு சிறிய கிராமம். அங்கே 100 வீடுகள் உள்ளன. ஜனத்தொகை 500. 500 ஏக்கர் நிலம் அதன் எல்லைக்குட்பட்டது. ஒரு வீட்டுக்காரருக்கு 400 ஏக்கர் சொந்தம். 20 வீட்டுக்காரர்களுக்கு மீதி 100 ஏக்கர் சொந்தம். இக் கிராமத்தில் ஒரு தடவையில் விளைகிற நெல் அல்லது தான்யம் 5000 கோட்டை என்றால் முதல் வீட்டாருக்கு 4000 கோட்டையும் 20 வீட்டாருக்கு 1000 கோட்டையும் விநியோகிக்கப்படும். இவர்கள் அவ்வப்போது கொடுக்கிற கூலியே இதர 79 வீட்டாருக்கும் கிடைக்கும். தனி உடைமையை ஏற்றுக்கொண்டிருக்கிற இன்றைய சமுதாயத்தில் இந்நிலையே காணப்படுகிறது. முதல் வீட்டாருக்கு மிதமிஞ்சிய தானியம்கிடைத்திருப்பதை அவர்கள் காசு, பணமாக மாற்றியே ஆகவேண்டும். இதன் பலனாக இக் கிராமத்துப் பொருளில் $\frac{4}{5}$ பாகம் எங்கோ சென்றுவிடுகிறது. அதுமட்டுமல்ல. இவர்களிடம் சேருகிற பணத்தை கிராமத்தில் செலவுசெய்ய வாய்ப்பு அங்கே இல்லாததால் நகரங்களில் செலவிடப்படுகின்றன, ஏன்? இவர்களுக்குள்ள வாய்ப்பும் வசதியும் பெருகி வருவதால் அமெரிக்கன் மோட்டார்கள் வாங்கவும், தங்கள் குழந்தைகளை வெளிநாட்டுக்கு அனுப்பவும்கூட செல

வாகிறது. ஆகையால் இக்கிராமத்தில் உள்ள செல்வம் வெளிநாடுகளுக்கே சென்றுவிட ஏதுவாகிறது. எனவேதான் கிராமத்திலுள்ள சொத்து அனைத்தும் கிராம சமுதாய உடைமையாக்கப்பட வேண்டும் என்று வினோபாஜி கூறுகிறார். இவ்வாறு அமைகிறபோது கிராமமே ஒரு குடும்பமாக ஒன்றுபட்டு வாழ்கிறது. வீட்டுக்கொரு திட்டமிட்டு, கிராமத் தேவைகளுக்கும் திட்டம் வகுத்து உற்பத்தி நடக்கிறது. சுய நிறைவு எய்தும் முனைப்பு தானாகவே ஏற்படுகிறது. இங்கேயுள்ள மக்கள் கூடிக் கலந்து எல்லாம் செய்வதால் தங்களைத் தாமே சார்ந்து நிற்கும் திறன்படைத்துவிடுகிறார்கள். எல்லாத் துறைகளிலும் செம்மையான வாழ்வுகிட்ட கிராமதானம் அடிகோலுகிறது. காந்தியடிகள் சொன்ன வழியில் செயல்பட்டு கிராம ராஜ்யம் அமைய இதுவே சிறந்த மார்க்கமாக அமைகிறது.

மேலும் அறிய உதவும் நூல்கள்:


| | | |
|---|---|---|
| Cent Percent Swadeshi | : | M. K. Gandhi |
| Khadi | : | ,, |
| *Economy of Permanence | : | J. C. Kumarappa |
| *Gandhian Economy and other essays | : | ,, |
| Peace and Prosperity | : | ,, |
| The Economics of Peace | : | ,, |
| *The Philosophy of work and other essays | : | ,, |
| Why the Village Movement? | : | ,, |
| A Philosophy of Indian Economic Development | : | Richard B Gregg |
| Economics of Khaddar | : | ,, |
| Technical Change and Cultural Patterns | : | Margerret Mead |

கைராட்டை – அதன் சரித்திரமும் புத்துயிரும்
சர்க்காவும் அஹிம்சா சமுதாயமும்
ராட்டைத் தத்துவ விளக்கம்


* இவை தமிழிலும் உள்ளன

மூன் பக்கத்திலுள்ள புத்தகங்களும்
இதர சர்வோதய இலக்கியங்களும்
எமது வெளியீடுகளும்
கிடைக்குமிடங்கள்:

**சர்வோதய பிரசுராலயம்,**
24 சீனிவாசபுரம்
தஞ்சை




**பாரதி புத்தக நிலையம்**
டவுன் ஹால் ரோடு
மதுரை

*

**ஒரியண்டல் புக் ஹவுஸ்**
258 மேலமாசி வீதி
மதுரை

# எமது வெளியீடுகள்



| | | |
|---|---|---|
| 1. | மகாத்மா காந்தியின் சுய சரிதம் (சுருக்கம்) | ரூ. நயை. 1—50 |
| 2. | சத்தியாக்கிரகம் | 1—00 |
| 3. | ரகுபதி ராகவ | 0—75 |
| 4. | காந்தி நூல்கள் முதல் தொகுதி | 7—50 |
| 5. | ,, 2-ம் தொகுதி | 7—50 |
| 6. | சர்வோதய சமுதாயம் | 0—06 |

இவை எல்லாக் காதி வஸ்திராலயங்களிலும் கிடைக்கும்.

---

**தமிழ்நாடு காந்தி நினைவு நிதி**
காந்தி மியூஸியம்
தல்லாகுளம் தபால், மதுரை